# பஜரே குருநாதம்

## (ஆதி தாளம் மிஸ்ர பீலூ ராகம்)

**பல்லவி**

பஜரே குருநாதம் மானஸ பஜரே குருநாதம் (பஜரே)
பஸ்மருத்ராக்ஷாதி அலங்க்ருத சரீரம்
வில்வமாலாதி அலங்க்ருத ஸிர்ஸ்கம் (பஜரே)
மந்த்ர மஹாமணி மந்த்ர ஸ்வருபம்
ப்ரணவ பயோதர ப்ரணவ ஸ்வருபம் (பஜரே)
மந்தஹாஸ முகம் மந்தாக்ஷ வீக்ஷணம்
ராஜாதி ராஜம் ஜகத்குரு ரூபம்
ராஜாதி ராஜம் காமகோடி ரூபம்
காமகோடி ரூபம் ஜகத்குரு ரூபம் (பஜரே)

# ப்ரணதோத்தாரணா

## (ஆதி தாளம் ஹிந்துஸ்தானி காபி ராகம்)

ப்ரணதோத்தாரணா கருணைக் கடல் சங்கரா (ப்ரண)
ப்ரணதோத்தாரணா பக்தன் மீது கருணை புரி
ஸுகுணானந்தரங்கனா ஆனந்தகுரு மஹேசா (ப்ரண)
நிகமோத்தாரணா அகணிதமஹிமநா
மங்கள தாயகனா ஆனந்தகுரு நடேசா (ப்ரண)

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

அணோரணியனா மஹதோமஹியனா
அப்ரமேயனா ஆனந்தகுரு மஹேசா (ப்ரண)
பரமபுருஷனாபரப்ரும்மதேவனா
ஜகத்குரு புங்கவனா ஆனந்தகுரு நடேசா (ப்ரண)

## எப்படிப்பாடினாரோ

### (ஆதி தாளம் ஆபேரி ராகம்)

**பல்லவி**

எப்படிப்பாடினாரோ குருநாதனை
அப்படிப்பாட நான் ஆசை கொண்டேன் குருவே
(எப்படி)

**அனுபல்லவி**

தோடகரும் பத்மபாதரும் ஸுரேச்வராசார்யரும்
ஹஸ்தாமலகாசார்யரும் சங்கர குருநாதனை
(எப்படி)

**சரணம்**

காலடியில் உதித்து கால்நடையாய் நடந்து
காசி முதல் காஞ்சி வரை காமகோடி பீடமமைத்து
வேற்றுமையில் ஒற்றுமை சொன்ன வேதாந்த
வித்தகரை
வேதனைகளை தீர்த்து வைக்கும் சத்குருநாதனை
(எப்படி)

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

# ராமா ராமா என்ற நாமம் சொல்லடா

ராமா ராமா ராமா என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
ராமதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

க்ருஷ்ணா க்ருஷ்ணா க்ருஷ்ணா என்ற நாமம்
சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
க்ருஷ்ணதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

ரங்கா ரங்கா ரங்கா என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
ரங்கதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

சிவ சிவ சிவ என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
சிவதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

பவ பவ பவ என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
பவதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

ஹர ஹர ஹர என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
ஹரதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

முருகா முருகா முருகா என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
முருகதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

சங்கர சங்கர சங்கர என்ற நாமம் சொல்லடா
பாமரனே உனக்கதில் பாரமென்னடா?
பொல்லாத யமன் வந்தால் விடமாட்டான்
சங்கரதாஸன் என்று சொன்னால் தொடமாட்டான்

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

**மூலாம்னாய ஸர்வஜ்ஞ பீட ஸ்ரீ காஞ்சீ காமகோடிபீட**

**ஸ்ரீஸ்ரீஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி**

**ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட பாடல்கள்**

ஸ்ரீ மடத்தின் சேவையில்

ஸ்ரீமதி அகிலாண்டம்மாள்

ஸ்ரீ நடராஜய்யர்

குடும்பத்தினர்

விஜய வருஷம் ஆனி அவிட்டம்

குருவாரம்

27.06.2013

# ஸ்ரீமத் ஆதிசங்கரபகவத்பாத ஸ்தோத்ரம்

ஸர்வ - ஶாஸ்த்ரார்த்த - ஸாராம்ஶ: யத்-க்ருபா-லேஶத: ஸ்புரேத்
தம் வந்தே பகவத்பாதம் காமகோட்யதிபம் குரும்
காமாக்ஷீ - கருணா-ரூபம் காமகோடி - ஜகத்குரும்
சின்மூர்த்திம் கலயே சித்தே ஶங்கராசார்யமவ்யயம்

# ஸ்ரீ காமாக்ஷீ பஞ்சரத்னம்

காமாக்ஷீம் கருணாபாங்க - லேஶதோ முக்தி - தாயினீம்
சித்த - ஶாந்தி - ப்ரதாம் வந்தே காமகோடி - விஹாரிணீம்

காஞ்சீ - மத்ய-கதாம் தேவீம் ஸர்வதேவ - நுதாம் பஜே
யத் - ப்ரதக்ஷிண - மார்கேஷீ ஸர்வ-தேவோத்ஸவா ரதா:

ஸ்ரீசக்ர-மத்யகே தேஶே பிலாகாஶ-கதம் மஹ:
த்ரிகோணே பைந்தவே பீடே காமாக்ஷ்யாக்யம் விராஜதே

ஸப்த - மோக்ஷ - புரீ - முக்யே காஞ்சீதி ப்ரதிதே புரே
ஓட்யாண-பீட மத்யஸ்தாம் காமாக்ஷீம் ப்ரணமாம்யஹம்

ஸர்வத்ர ஸர்வ-தேவாஸ்து வராபய-கரா : ஸ்திதா:
த்வதீயௌ தேவி காமாக்ஷி பாதாவேவானுக்ருஹ்ணத :

காமாக்ஷீ - பஞ்சரத்னாக்யம் ஸ்தோத்ரம் யஸ்ய கலே ஸ்திதம்
காமாக்ஷீ-க்ருபயா ஸத்யோ லபதே ஸ பராம் கதிம்

மூலாம்னாய ஸர்வஜ்ஞ பீட ஸ்ரீ காஞ்சீ காமகோடிபீட
ஸ்ரீஸ்ரீஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளால்
இயற்றப்பட்டது.

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

# ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பெரியவா அருளியது

காமகோடி பீடமடி காமாக்ஷியின் பீடமடி
சந்திரசேகரரமர்ந்த பீடமடி சகியே சங்கரரின் பீடமடி

தானதர்மம் செய்யும் பீடம் ஏழைகளை காக்கும் பீடம்
ஜயவிஜயேந்திரர் பீடமடி சகியே பக்தி வளர்க்கும் பீடமடி

காமக்ரோதம் நீக்கும் பீடம் கோயில்களை காக்கும் பீடம்
முதியோரை காக்கும் பீடமடி சகியே மோகம் போக்கும் பீடமடி

கலைகளை வளர்க்கும் பீடம் கவலையெல்லாம் போக்கும் பீடம்
மேருவை பூஜிக்கும் பீடமடி சகியே சிவனை பூஜிக்கும் பீடமடி

அத்வைதம் சொல்லும் பீடம் ஆத்மாவை விளக்கும் பீடம்
சாக்ஷாத்காரமளிக்கும் பீடமடி சகியே சாதனை விளக்கும் பீடமடி

நீதியை விளக்கும் பீடம் நேர்மையாயிருக்கும் பீடம்
நிந்தனை பொறுக்கும் பீடமடி சகியே நித்யானந்த ஸ்வருபமடி

வேதாந்தம் சொல்லும் பீடம் வேதனை போக்கும் பீடம்
வேதார்த்தம் சொல்லும் பீடமடி சகியே வேதாந்த பீடமடி

குருக்களின் பாரம்பர்யம் குறைகளை போக்கும் பீடம்
கோவிந்தனை பாடும் பீடமடி சகியே கோபம் போக்கும் பீடமடி

ஜனனத்தை அழிக்கும் பீடம் ஜடத்தைப் போக்கும் பீடம்
ஞானபோத பீடமடி சகியே ஜகத்குரு பீடமடி

குருவின் சரணம் பற்றி குரு உபதேசம் பெற்று
சித்தம் சுத்தமாக்கி சகியே குருவருள் பெற்றிடுவோம்.

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

# பஜரே போதேந்த்ரம்

## ஹிந்தோள ராகம் ஆதி தாளம்

பஜரே போதேந்த்ரம் மானஸ
பஜரே போதேந்த்ரம் (பஜரே)

பரமசாந்த குண நித்ய ஸ்வரூபம்
கோவிந்தபுர க்ஷேத்ர நித்ய நிவாஸம் (பஜரே)

பக்கோத்தாரம் நாம உபதேசம்
பரமகருணையாய் விளங்கிடும் குருமூர்த்தம் (பஜரே)

காவேரி தீரத்தில் காமகோடி பீடத்தில்
ஐம்பத்தொன்பதாய் குருவாய் விளங்கிடும்
குருநாதன் (பஜரே)

ராம நாம மந்த்ரம் கடைத்தேற வைக்கும் மந்த்ரம்
ஜபம் செய்து தபம் செய்து கடைத்தேறுவோம்
நாம் (பஜரே)

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர

# சந்த்ரசேகர நிலயம்

## (ஆதி தாளத்தில் ஸிந்துபைரவியில் வேங்கடாசல நிலயம் மெட்டு)

சந்த்ரசேகர நிலயம் காஞ்சீபுர வாசம்
பக்தஜன தக்ஷம் புதஜன சேவிதம்

(சந்திர சேகர)

அம்புஜ ஸம நேத்ரம் அகணித குணசீலம்
பக்தஜன சேவிதம் சந்த்ர சேகரம்

(சந்திர சேகர)

கலவையில் சந்யாசம் காஞ்சீயில் ஸ்ரீ பீடம்
காஷாய தண்டமாத்ரம் யதிவர ச்ரேஷ்டம்

(சந்திர சேகர)

யக்ஞ ஸம்ரக்ஷண தக்ஷம் வைராக்ய தாயகம்
ஜயேந்த்ர ஸரஸ்வதி கான விலோலம்

(சந்திர சேகர)

ஹரஹர சங்கர ஜயஜய சங்கர